சிவ மயம்

# மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி.

(மார்கசீர்ஷ மாசப் பாராயண மஞ்சரி)



வேதாந்த மடம், திருப் பூவணம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்



[விலை அணா எட்டு

## தத்துவராய ஸ்வாமிகள் செய்த

1. அருள் திருப் பள்ளி எழுச்சி.
2. சிவப் பிரகாச சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி.
3. ஸ்வரூபானந்த சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி.
4. தத்துவப் பிரகாச நாயனார் திருப் பள்ளி எழுச்சி.
5. பரிபூர்ணப் பிரகாச நாயனார் திருப் பள்ளி எழுச்சி.
6. ஸ்வரூபானந்த சுவாமிகள் முதல் திரு எம் பாவை.
7. ஸ்வரூபானந்த சுவாமிகள் இரண்டாந் திரு எம் பாவை.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் செய்த

8. திருப் பள்ளி எழுச்சி

ஆண்டாள் அருளிச் செய்த

9. திருப் பாவை.

~~[illegible]~~

மாணிக்க வாசக ஸ்வாமிகள் செய்த

10. திரு எம் பாவை.

மாணிக்க வாசக ஸ்வாமிகள் செய்த

11. திருப் பள்ளி எழுச்சி.
12. முதல் அகவற் பா. 95 வரிகள்

அத்வைத - வைஷ்ணவ - வேதாந்தங்கள்.

---

[ஆக 7 திருப் பள்ளி எழுச்சி. 4 திருவெம் பாவை. 1 அகவல் பா 95 வரி உடைய [illegible] இதில் இருக்கின்றன !

ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ।



जीवन्मुक्तस्तु तद्विद्वानिति वेदान्त डिण्डिमः ॥

कामक्रोधश्च लोभश्च देहे तिष्ठन्ति तस्कराः ।
ज्ञानरत्नापहाराय तस्मात् जाग्रथ जाग्रथ
जन्मदुःखं जरादुःखं जायादुःखं पुनःपुनः
संसारसागरं दुःखं तस्मात् जाग्रथ जाग्रथ ॥



காசீகாநந்த ஞாநாநந்தஸ்வாமிகள்.

माता नास्ति पिता नास्ति नास्ति बंधुस्सहोदरः ।
अर्थं नास्ति गृहं नास्ति तस्मात् जाग्रथ जाग्रथ ॥
आशया बद्धते लोके कर्मणा बहुचिंतया ।
आयुस्क्षीणं न जानाति तस्मात् जाग्रथ जाग्रथ ॥

ஓம் தத் சத்

பரப்பிரம்மணே நம:

[illegible]

ஸ்ரீ தத்வ ராய சுவாமிகள் அவர்கள் இயற்றிய

# திருப் பள்ளி எழுச்சி.

# திரு எம் பாவை.

அகம் பிரஹ்மாஸ்மி

அயமாத்மா பிரஹ்மம்.



தத் த்வமசி.

இவை.

திருப் பூவணம், வேதாந்த மடம்,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்,**


சென்னை, அருட்பெருஞ்ஜோதி அச்சகத்தில்
பதிப்பிக்கப் பெற்றன.

காசிகாநந்த நிலைய வெளியீடு.

விஜய ஆண்டு] 1953. [மார்கழி மதி

இத் திருப் பள்ளி எழுச்சி
திரு எம் பாவைகள்,

திருக் களர்
ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளவர்கட்கு

மிக விருப்புடையன வாகலின்
அவர்கள் திருவடி நினைவின் பொருட்டு
வெளியிட்டு,
அவர்கள் பாத தாமரைக்கே
அர்ப்பணம் செய்யப்பட்டன.

கா. சுவாமிகள்

சிவமயம்.

# அணிந்துரை

உலக மாந்தர்கள் நன்மை யடையும் பொருட்டு, மகான்கள் மாந்தர்களின் அறிவை அநுசரித்துச் சரியை கிரியை யோகம் ஞானம் என்றும், கருமம் பக்தி ஞானம் என்றும் பல மார்க்கங்களை இயற்றினார்கள். அவை யாவும் அதிகாரி பேதத்தால் உபயோகம் உடையனவே ஆகும்.

அவற்றுள், சிவ பக்தியினைப் புகட்ட, மாணிக்க வாசக சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி, திரு எம் பாவை என்றும், விஷ்ணு பக்தியினைப் புகட்ட, ஆண்டாள் திருப் பாவை என்றும், தொண்டர்அடிப் பொடி ஆழ்வார் திருப் பள்ளி எழுச்சி என்றும், குரு பக்தியினைப் புகட்ட, ஏறும்பூரில் (300) முந் நூறு வருஷங்கட்கு முன் சமாதியுற்று இலங்கும் தத்துவ ராய சுவாமிகள் என்னும் மகான், திருப் பள்ளி எழுச்சி என்றும், திரு எம் பாவை என்றும் செய்திருக்கின்றார்கள். அம் மூன்றனுள், தத்துவ ராய சுவாமிகள் இயற்றியவை: அருள்திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) 2. சிவப் பிரகாச சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி (கவி 11.) 3. ஸ்வரூபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) 4. தத்துவப் பிரகாச நாயனார் திருப் பள்ளி எழுச்சி. (கவி 10.) 5, பரிபூரணப் பிரகாச நாயனார் திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) எனப் பெயர் பெற்று, 51 கவியில் ஐந்து திருப் பள்ளி எழுச்சி யாகவும், ஸ்வரூபாநந்த சுவாமிகள் முதல் திரு எம் பாவை (கவி 20.) ஸ்வரூபாநந்த சுவாமிகள் இரண்டாந் திரு எம் பாவை (கவி 21.) எனப் பெயர் பெற்று, 41 கவியில் இரண்டு திரு எம் பாவை யாகவும் விளங்குகின்றன. இத் தகைய 92 கவிகளும் வேதாந்தக் கருத்துக்களையும், தத்வமசி மகா வாக்கியப் பொருளையும் செவ்வையாகப் பசு மரத் தாணி போல் விளக்குகின்றன, பாடு துறை- அடங்கன் முறை என்னும் இரண்டனுள் பாடு துறை என்னும் நூலில் இவை உள்ளன. இவற்றைத் தனியாக வெளியிடின், பலருக்கும் உபகாரம் ஆகும் எனப் பல பெரியார் கூறினமையின், திருப் பள்ளி எழுச்சி-திரு எம் பாவை என்னும் (கவி 92) ஏழையும் தனி யாக அச்சிட்டு, யாவரும் மோக்ஷம் அடையவேண்டும், என்னும் கருத்தால், அன்போடு வெளியிடுகிறோம். மூர்த்திதலந்

சித்தம் புனைமாட்டுத் தொடங்கினார்க்கு வார்த்தைசொலச் *சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்று தாயுமானார் கூறியபடி யாவரும் குருபக்தி செய்து மோக்ஷம் அடையவேண்டுமென விரும்புகின்றோம்.

மாணிக்க வாசக ஸ்வாமிகள் இயற்றிய சிவ புராண முதல் அகவற்பாவும், திருவெம்பாவைச் செய்யுள் 20-ம் திருப்பள்ளி எழுச்சி செய்யுள் 10-ம் ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவைச் செய்யுள் 30-ம் தொண்டரடிப் பொடி ஆழ்வார் செய்த திருப்பள்ளி எழுச்சிச் செய்யுள் 10-ம் இத்துடன் இணைத்திருக்கின்றோம், படிப்பவர்கள் சௌகரியமாகச் சைவ வைஷ்ணவ வேதாந்தங்களின் கருத்தைச் செவ்வனே அறிந்துய்யுமாறு எல்லாம் வல்ல இறை உருவாம் ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் விரைத் தாமரை மலர் அடிகளைப் பணிந்து இறைஞ்சுகின்றோம்.

இப்பதினொன்றுக்கும் சேர்த்து **மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி** (தனுர் மாஸப் பாராயண மஞ்சரி) எனப் பெயர் வைத்து வெளியிட்டிருக்கின்றோம். பக்தசிகாமணிகள் படிப்பார்களாக.

**காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள்.**

**வேதாந்த மடம், திருப்பூவணம்.**

---

* 'சற்குருவும் வாய்க்கும்' என்ற உண்மைப் பொருள் ஆராய்ச்சிக் குறிப்பு.

சிவமயம்

# அருள் திருப் பள்ளி எழுச்சி.

எண்சீர்க் கழி நெடில் அடியால் வந்த ஆசிரிய விருத்தம்.

போற்றிநின் மாமறை மீறமர் பொருளே
    புரைஅற நிறைந்தொளிர் போதநன் மாதே,
தோற்றமும் இறுதியும் அறநிகழ் கடலே
    துணைபிணை இறந்துள நிறைந்ததூ வெளியே,
சீற்றமின் முனிவர்கள் திளைத்தெழுந் தேனே
    சிவப்பிர காசனைப் பிறிவற நிகழும்,
ஏற்றிய பொருள்எனும் எழில்தரு நகையே
    இறையவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 1

உதயநற் கிரியினை யணுகினன் பரிதி
    உடுமதி மழுங்கின உம்பர்வந் தடைந்தார்,
சிதைவில்நற் புகழ்அரி அயனொடிந் திரனுந்
    திசைதொறு நிறைந்தனர் திகழ்தரும் அடியார்,
இதயமண் டபத்தினில் எழில்கொளும் அறிவாம்
    எந்தைநற் சிவப்பிர காசன்நல் எழில்சேர்,
சுதைஎனுஞ் சுவையே துறவியின் துணையே
    சுடர்ஒளி யேபள்ளி எழுந்தரு ளாயே. 2

நற்றடங் குவளைகண் மலர்ந்தன குருகு
    நலம்பெறச் சிலம்பின நான்மறை முழக்கம்,
உற்றன பல்லியம் ஒலித்தன எங்கும்
    ஓங்கின தும்புரு நாரதர் கீதம்,
பற்றற நினைபவர் பருகிடும் அமிர்தே
    பரமன தருள்எனும் பகருதற் கரிய,
நற்றவ மேஎன துற்பவக் கடுவே
    நாயகி யேபள்ளி எழுந்தரு ளாயே. 3

ஒளியினுக் கொளியே உயிருனுக் குயிரே
    உருகிடும் உளத்தினில் ஒவிலா உணர்வே,
அளியினுக் களியே அகிலபூ தங்கட்
    கன்னையும் ஆய்அத்தன் ஆகிநின் றனே.
தெளிவினில் தெளிவே சிவப்பிர காசன்
    திகழ்திரு மேனிய னாஞ்சிறப் புடைய,
களிமயிற் பெடையே காரணப் பொருளே
    களங்குழை யேபள்ளி எழுந்தரு ளாயே. 4

காலமும் ஊழியும் ஆகிநின் றவற்றின்
    கருவது வாய்அவை கழன்றகற் பகமே,
சீலமு நோன்புமில் சிறியஎன் றனக்குச்
    சிவநெறி அருளிய தேசிகத் திருவே,
மூலமும் ஆய்முடி வாய்முடி வில்லா
    முத்தனைப் பெருகவ முழுதருள் முகிலாம்,
கோலநற் குயிலே குருமணிக் குகையே
    கோமள மேபள்ளி எழுந்தரு ளாயே. 5

ஐம்பெரும் பூதமும் அவற்றதி பதியாம்
    ஐவரும் ஆய்அவை அன்றிநின் றனே,
உம்பரும் உணர்வரி தாயஎன் நிதியே
    உலகமும் உயிர்களும் ஆய்விரிந் தானே,
நம்பன்நற் சிவப்பிர காசன தெழில்சேர்
    நாடரும் பரம்பொருள் ஆகிய நறவே,
என்பரம் எனஎனை என்றுகொண் டானே
    இன்அமிர் தேபள்ளி எழுந்தரு ளாயே. 6

கனவினும் அமரர்கண் டறிவருங் கருணைக்
    கழல்இணை கழிகடை யேன்றனக் கருளி,
நனவினின் வினவிவந் தாண்டுகொண் டானே
    நாயகி யேநற வார்குழல் அமிர்தே,
சொனமறை முடிவுகள் துதிசெயும் பொருளே
    துரியமும் இறந்துசொற் கழிந்ததத் துவமே,
புனமயி லேஇறை ஓதினும் பிரியாப்
    புண்ணிய மேபள்ளி எழுந்தரு ளாயே. 7

நல்லடி யார்உளக் கருத்தினை முடித்து
நல்நலம் பெருகிட நயந்தநற் குயிலே,
செல்லலை தறஎனை ஆண்டொரு மொழியில்
திரித்தெனக் கருளிய தேசிகத் திருவே,
அல்லுநற் பகல்அற ஆரிய ஞர்தம்
அழகுறு மேனியில் அணிதிரு அருளாம்,
மெல்லிய லேவினை யாவினை வேஎன்
வேதக மேபள்ளி எழுந்தரு ளாயே. 8

பிரமனை முதல்வரு பிபீலிகை ஈறுப்
பெருகிய யோனிகள் தோறும்அங் குயிராய்த்,
திரம்எனத் திகழ்தரு சிவனும் ஆகித்
திகழ்ந்தவை கழன்றொளிர் சிவப்பிர காசன்,
வரம்உறத் திகழ்தரு மேனிய தாகி
மன்அரு ளேமயற் பிணிக்குநன் மருந்தே,
பரம்என இருள்உறு மகனை ஆண்ட
பணிமொழி யேபள்ளி எழுந்தரு ளாயே. 9

அம்பொருட் சுருதியின் சிரத்தினில் ஆடி
அழகுறும் அன்பர்தம் உளத்தின்வீற் றிருந்த,
செம்பொருட் சிவப்பிர காசன தெழில்சேர்
திருஅருள் ஆகிய தெய்வநல் அணியே,
வம்பினில் திரிதரு மதியிலி நாயேன்
மகவிடாய் கெடவலிந் தாண்டுகொண் டாளே,
உம்பருக் குணர்வரி யாய்எமக் கெளியாய்
ஒண்ணுத லேபள்ளி எழுந்தரு ளாயே.

அருள் திருப் பள்ளி எழுச்சி முற்றிற்று

## சிவப் பிரகாச ஸ்வாமிகள் திருப் பள்ளி எழுச்சி

செயசெய வாழிநல் தேவர்கள் தேவே
சிவப்பிர காசஎன் சிந்தையுள் தெளிவே,
அயல்உற வறஅருள் ஆர்அரு ளதுகண்
டாதர வோடுநின் அடியிணை பணிவோம்,
அயர்வுடன் அறிவெனும் அலைகழன் றெங்கும்
ஆசற வேவிரைந் தருளிய அமலா,
கயவரின் முதல்உறு கழிகடை எனைஆள்
கருணைய னேபள்ளி எழுந்தரு ளாயே. 1

வெருள்அற விவேகன்வந் தெழுந்தனன் மாய
இருளது கழிந்தது மாமறை ஈறுங்,
தெருள்உறு வலம்புரி சிலம்பின எங்கும்
சிலம்பின சிவன்அருள் ஆகமம் எல்லாம்,
மருள்அறு சமதமம் ஆதிகள் எல்லாம்
மலர்ந்தன அறுபகை அழிந்தன ஞானப்,
பொருள்உறு கழல்களென் புந்தியில் தருவாய்
பூரண னேபள்ளி எழுந்தரு ளாயே. 2

கூடின மாமறை ஈறுகள் கீதம்
குழறின ஆகமங் குலவியும் அறியாப்,
பூவினின் அயன்மால் அரனெடுந் திரளும்
புகல்அரி தென்றயர் வுறஎனை யாண்டு,
போவதும் வருவதும் அறஉணர் வாக்கிப்
புகல்அரும் பாவனை புரைஅற முழுத்தி,
பரவையுங் கழன்றகன் ஆக்கிய அரசே
இருஞ்சிவ மேபள்ளி எழுந்தரு ளாயே. 3

இந்திரன் முதல்வரும் இமையவர் ஒருபால்
இரவியு மதியுமாம் ஏவலர் ஒருபால்,
மூர்த்திய தேவர்கள் மூவர்கள் ஒருபால்
முனிவர்கள் துதிசெயு முழக்கங்கள் ஒருபால்,
புந்தியில் உனைநினைந் துருகிஉள் அழிந்து
புராணநன் மலர்கொடு தொழவந்து நிறைந்தார்,
வந்தெனக் கருள்செய்த மலர்அடி யானே
வானவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 4

ஐயுந்து மாகடல் ஆக்கையின் உள்ளே
  அடற்புல னென்அரிப் புண்டறி வின்றி,
மையுந்து மாமர ணப்பிறப் பின்வாய்
  வருந்துகின் றேனைவந் தஞ்சல்என் றருளிப்,
பொய்உந்தும் ஊனைப்பி ரித்துணர் வாக்கிப்
  பொருந்திய சிற்கனங் காட்டிய புனிதா,
மெய்யெங்கும் ஆகவி ழித்தகன் னளித்த
  விரிசுட ரேபள்ளி எழுந்தரு ளாயே. 5

புழுவிடைக் தசும்புறு புலால்கமழ் ஆக்கை
  பொருள்என உழைதரு கோக்கியர் தங்கள்,
குழுவிடை நினைந்தழிந் துகுதரு வேனைக்
  கூவிவந் தாண்டிடுங் குரைகழல் அரசே,
கெழுமிடை உலகங்கள் கிளர்தரு திசைகள்
  கீழொடு மேல்பக்கம் உறும்உயிர் எவையும்,
பழுதற மிகுவிழி யாக்கிய பரனே
  பரஞ்சுட ரேபள்ளி எழுந்தரு ளாயே. 6

அறிவினை வடித்தநற் கிளியது போல
  அளவறு சாத்திரம் அழகுறக் கழறி,
அறிவது பிறிதிலை விடயம தொழிய
  அறிவறும் அவருடன் அழிதரு வேனைச்,
செறிதரு திருஅடி சென்னியிற் சேர்த்தித்
  திரித்தறி வாக்கிஅங் கேடிறம் அழித்துக்,
குறிஅற மிகுவழி ஆக்கிய கோவே
  குருபர னேபள்ளி எழுந்தரு ளாயே. 7

இரும்பினும் வலிதரு நெஞ்சினை உருக்கி
  இடம்பெற மகிழ்தரு கோயில தாக்கி,
இரும்பது பருகிய நீரது போல
  என்னுயிர் பருகினை இன்னதென் றறியேன்,
கரும்பினில் ஊறலும் அமிர்தமுந் தேனும்
  கலந்துறு சுவைஎனக் கனிதரு கண்ணே,
பெரும்பய னேஎன துண்ணிறைந் திருந்த
  பேர்ஒளி யேபள்ளி எழுந்தரு ளாயே. 8

ஒன்றெனப் பலஎன வுரைதரு பொருள்ஆய்
உருவரு உண்மையும் இன்மையும் ஆகி,
நின்றநற் பொருள்களுக் குயிரதும் ஆகி
நிறைந்தொழி வறநின்ற நேர்மையின் வடிவை,
இன்றெனக் கெளிவந்திட் டுளங்கையிற் கனியாய்
இவன்அவன் எனஎனை ஆண்டஅற் புதனே,
துன்றிய மறைதொடர் வரியநற் சொருபா
னந்த னேபள்ளி எழுந்தரு ளாயே, 9

நாய்வயின் உள்ளதோர் குணமதும் இல்லா
நலம்இலி யாய்நர கினில்விழு வேற்குத்,
தாய்என ஆகிவந் திணைஅடி சூட்டித்
தகஅருட் பெருங்கனை யளித்தஎன் தலைவா,
பாவியேன் நீசெய்த பரிசது நினையேன்
பதைத்துரு கேன்கண் ணீர் சொரியவுங் காணேன்,
ஆவியுஞ் சோரேன் அலறிநின் றழியேன்
அருள்கட லேபள்ளி எழுந்தரு ளாயே. 10

நாயினுங் கடையாய்க் கிடந்தஎன் றனக்கு
நன்மலர்ப் பாதம்என் சென்னியிற் பதித்துத்,
தாயினுஞ் சாலத்த யாவுறப் பரிந்து
தரம்அறப் பொழிந்திடுங் கருணைநற் கடலே.
ஆயுநற் பிரம்ம நாயகியும் அமையா
தருட்கனை யளித்தனை அடியனேன் தரமே
ஈனைப் பணிகொளு மாறது கேட்போ
நின்மல னேபள்ளி எழுந்தரு ளாயே. 11

சிவப் பிரகாச சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி முற்றிற்று.

## சொருபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி

ஒருதிரு ஒளியில்என் மதிஒளித் துள்ளத்
தாமரை மலர்ந்துகண் ணிருகுத் ததுபோற்,
பரிதியின் ஒளிவரப் பனிமதி ஒளித்துப்
பங்கய மலர்ந்துகண் ணிருகுத் தனவால்,

கருதிஉன் அடிஇணை தொழநினைந் தொருமுக்
கடவுளும் அமரருங் கடைத்தலை அணைந்தார்,
சுருதிகள் தொடர்சொரு பாநந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 1

மாவினம் அளிகளி செயமரங் களித்து
வாழும்அங் குயிற்குலத் துடன்வளம் பெருகக்,
கூவின வாரணம் பத்தியுட் புகுந்து
குழுமிய சங்கநல் வலம்புரி உளக்காப்,
பூஎன இசைத்தனர் வீணையங் கிழவர்
பொருந்தினர் திருந்தடிப் போதுடன் கண்ணீர்,
தூவினர் பெருஞ்சொரு பாநந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 2

ஊன்றனை நான்என நினைந்தனை நினைய
உளம்இவி யேசெய்த களவினுக் கெல்லாஞ்,
சான்றது ஆகிநின் றமையறிந் தடியேன்
றரிக்கக லேன்எனத் தான்உவந் தருளி,
ஈன்றவ விறும்பரிந் தென்பிழை நினையா
தென்னைவந் தாளஇந் நிலத்தொரு வடிவாய்த்,
தோன்றின னேசொரு பாநந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 3

கெழும்அடி யார்கள்சங் கீர்த்தநம் ஒருபால்
கேட்கவும் அரியநின் றுட்கம லங்கள்,
டழும்அடி யார்ஒரு பால்ஒரு பால்வே
தாகம புராணகீ தாதிகள் அன்பால்,
எழுமையு மான்களன் றேத்தொலி ஒருபால்
இமையவர் இடர்உற இன்பம்உற் றடியேன்,
தொழும்அடி யாய்சொரு பாநந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 4

திகைத்திட மூவருந் தேவரு மறையுந்
    தீவினை எனைஆண் டனைதிரு அருளின்,
மிகைத்திறம் என்சொல்லி வியப்புற அடியேன்
    வேண்டிய வெனவினை யாடலி டளித்தாய்
உகைக்கும்நும் புலன்களும் உறுபகை ஆறும்
    ஒங்கெழு பிறவியும் உதிரான் நிலையில்,
துகைத்தவ னேசொரு பாகந்தச் சுடரே
    சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 5

நோக்கிமுன் வினைஅற நுகர்வுறு விடய
    நோக்கும்இந் தியங்களின் போக்கறுந் தகத்தே,
தாக்கிய வாதனை தன்னையுந் தவிர்த்துத்
    தமத்தினைக் கடந்துணர் சாக்கிய தாக்கிச்
சாக்கியருஞ் சான்றொடுந் தமித்துமின் றொளிருந்
    தற்சொரு பமும்உப சமித்துனில் ஒன்றத்,
தூக்கினை நற்சொரு பாகந்தச் சுடரே
    சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 6

முன்னவ னேமுடி வேஅடி யேனை
    முடிவில்இன் பத்துற முழுத்துபேர் உததி,
அன்னவ னேஅக நிறைந்தஆர் அமிர்தே
    அண்டம்என் திசைசரா சரம்அள வற்ற
பின்அவன் ஏகம்எல் லாம்ஒரு மொழியிற்
    பிறிதறத் திகழுமின் பேர்ஒளி ஆகச்,
சொன்னவ னேசொரு பாகந்தச் சுடரே
    சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 7

கடல்உறு திரைநுரைக் கணம்எழுந் தடங்கக்
    கனைகடல் எழுந்தடங் காவகை போல,
உடல்உயிர் உணர்விவை யுனில்எழுந் தடங்க
    ஒன்றினில் அடங்குதல் உதித்தல்இல் லவனே.
விடல்அரும் வினைஇருள் இடைஅலம் வருவேன்,
    வீடுகண் டடர்கெட வெளிப்பட வந்த
சுடர்ஒளி யேசொரு பாகந்தச் சுடரே
    சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 8

இடவிய படத்தினில் எழுதுசித் திரங்கள்
　　எல்லையில் பலஉள போல்இருந் தாலும்,
தடவிய பொழுதில்அப் படம்அல தில்லாத்
　　தன்மைய தெனஇறை தந்தமெய் விழியால்,
திடவிய திருஉரு அல்லது காணேன்,
　　திருஅருள் பெறத்தவஞ் செய்தவர்க் கல்லால்
தொடர்வரி யாய்சொரு பாநந்தச் சுடரே
　　சுந்தர னேபள்ளி எழுந்தரு ளாயே. 9

மாயவ னேவடி வில்லதோர் வடிவே
　　வடிவுகொண் டவனியில் வந்தெனை யாண்ட,
தாயவ னேமிகு தத்துவப் பயனே
　　சங்கரன் மால்அயன் தமக்கரும் பொருளே,
வாயவனே அடி யேன்மனத் தவனே
　　வாக்கொடு மனம்உற நோக்குதற் கரிய
தூயவ னேசொரு பாநந்தச் சுடரே
　　சுந்தர னேபள்ளி எழுந்தருளாயே. 10

சொருபாநந்த சுவாமிகள் திருப்பள்ளி எழுச்சி முற்றிற்று

---

## தத்துவப்பிரகாச நாயனார் திருப்பள்ளி எழுச்சி.

வாழிய வாழிய மறைமொழி முடிவே
　　மக்களும் மனைவியுஞ் சுற்றமும் பொருளும்,
ஆழ்கய மதனிடைத் தாமரை யிலைநீர்
　　ஆகிய இயல்பினை அறிதுறக் காட்டி,
வீழ்தரும் ஊன்உயிர் வேறும்அப் படியே
　　விளங்கிட அருள்செய்து விண்ணவர் எல்லாந்,
தழுவும் அரியபொற் றுள்இணை தருவாய்
　　தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே,

மாகரு முனிவரு மறைகளும் அறியா
வளங்கெழு தாமரை மலர்அடி அடியேன்,
சேகர மிசையினில் அழகுறச் சேர்த்துத்
திகழ்கன வுங்கன வுங்கெட வைத்துப்,
போகரு மையும்வர அருமையும் நிகழும்
புரைஅறு தொம்பதத் துரிசறு கரியைச்,
சாகரத் ததில்கண்டு தந்தருள் பவனே
தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 2

பண்டுள மதத்தினைப் பார்என அடியேன்
பார்த்தது கண்டிலேன் பார்க்கும்அக் கரியை
கண்டனன் எனஅதிற் கண்செவி கைகால்
கடைநடு முதல்இரு புறம்பின்முன் கீழ்மேல்.
உண்டுகொ லோஎன ஒன்றையுங் காணேன்
ஒழிவறும் அறிவதென் எதிர்உரு எனவே
தண்டிவக் கினைஅது தந்தருள் பவனே
தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 3

போக்கிய உலகுடல் சாக்கியம் ஆக்கிப்
பொருந்திட அடியனுக் கிருந்தமை உரைத்த,
வாக்கியங் கேட்டது மாற்றிய பின்னை
மன்னிய பரபுரத் தென்னைவைத் தவனே,
பாக்கிய பலமான வந்தநின் அருளாற்
பயம்அறு காயகை மதுரம் பொருளைத்.
தாக்குதல் ஒழிதர மொழிதரு பவனே
தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 4

அயனொடு மாயவன் உலகுகள் அவர்க்கே
அருளுதல் மாற்றுதல் வினைதருள் எனவே,
நயனுடை மொழிசெவிப் புகுத்துமுன் அறிந்த
நான்அவ ரைய்அது பலித்ததும் அன்றிப்,
பயனுடை உருத்திரன் மகேசனும் ஆக்கிப்
பழித்தபின் சதாசிவம் அளித்ததும் பழித்தாய்,
சயமுறும் அதிற்பரம் பொருள்எனக் கருள்வாய்
தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 5

இப்படி இதுஎன இயம்புதல் அரிதாய்
இறைஉறு காரண உபாதியை விழுங்கி,
அப்பொருள் அறிபொருள் ஆகிய பரமாய்
அளவறு பௌதிக பூதமும் ஆகி,
எப்பொருள் நிகழ்வ ததுதனை அடியேன்
எல்லையில தாகிய பலங்கெட அருளாய்,
தற்பர ஒளிஎன அருளிய பரனே
தத்துவ ஞானபள்ளி எழுந்தரு ளாயே. 6

என்இடை நீயுமற் றுன்இடை யானும்
இருந்தபின் இரும்பெரும் பெருள்அவை எவையுந்,
துன்னிய உலகமு நீயும்அப் பரிசே
தோற்றிய நிலைமையு மாய்த்துள உன்னை,
மன்னிய கரதல மணிஎனக் காட்டி
வருவது போகுவ தாகும்என் பிறவி,
தன்னைஓர் கொடியினில் வேர்அறுத் தவனே
தத்துவ ஞானபள்ளி எழுந்தரு ளாயே. 7

நீந்தரும் பெரும்பவக் கடலிடை வீழ்ந்து
நெடுங்கரை ஏறுதற் கலமரு வேனை,
ஏந்திஉன் திருஅடி ஆகிய கரைக்கே
இளைப்பற இருத்திய அளப்பெருங் கடலே,
வாய்ந்தசிற் கனம்புகுங் காலம்இ தெனவே
வரும்இதம் அளித்தேஎன் பெருமதம் அழியச்,
சாந்திதந் தவபதம் ஆக்கிய அரசே
தத்துவ ஞானபள்ளி எழுந்தரு ளாயே. 8

விதிமுறை காரிய காரண மாறி
விளம்பிய உயிர்பரம் விளங்கிய அதுபோல்,
உதிதம தாகிய வாதனை மாறி
ஒளிமணை முதலிய நிகர்சிவம் அருளி,
முதியநான் மாமறை முடிமொழி நாலு
முனம்என முறைமுறை இனம் அறவிறந்த,
சதுர்பட இருந்தஅப் படிஇருந் தவனே
தத்துவ ஞானபள்ளி எழுந்தரு ளாயே. 9

பங்கயந் திககரற் குதவிய தெங்கே
பயோதரம் அதர்குல குதவிய தெங்கே,
இங்கிவை ஒழியஎன் செயலும்அப் படியே
என்பிறப் பறுத்தநீ என்பெறக் கடவாய்,
அங்கமோ டுயிர்பொருள் மூன்றும்உன் னவே
ஆயினுங் கொண்டனே அவ்வழி அடியேன்,
சங்கையில் தொழும்பல தேதுமற் றறியேன்
தத்துவ னேபள்ளி எழுந்தரு ளாயே. 10

தத்துவப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி முற்றிற்று.

## பரிபூர்ணப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி.

உற்றறி வெழஉள இருள்அகன் றதுபோல்
உதயம்வந் தெழஉடு ஒளிஅகன் றனவால்,
கற்றுடல் உயிர்பொருள் அப்புடன் கலந்து
காண்மலர்த் தாள்இணை காயினேற் கருளிச்,
சற்றென விசுவாசக் கிரகர ணங்கள்
சதுர்த்தச செலவுகன் கலப்பழிப் பொன்றிற்,
பற்றுதல் திசைமுகர் பதம்என அருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 1

அண்டரும் பரம்எழ அறிவகன் றதுபோல்
ஆதவன் எழஉடு மதியகன் றனவால்,
எண்திசை தொறுந்திரிந் தெனேஅறி யாதே
எவத்தெனே ஆண்டுநை சத்தெனும் அதிலே,
கண்டுகொள் கனவைஇவ் வணம்என இருத்திக்
காமிய தாமதுட் கரணகளுடனே,
பண்டுலை களக்தவர் பதம்என அருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே, 2

பத்துடன் நாலையும் பதைப்பற இருத்திப்
பார்இருந் திவ்வணம் என்றருள் புரிய,
அத்தம துருவம தாயின தென்ன
அதுமிகு சுத்தியவ் வியத்தமா மாயை,
உத்தம உருத்திர பதமுநற் ப்ரகிர்தி
உளதுட லாமுதற் பாழ்சகல் லக்கனை,
பத்திய தறிவிராக் ஞன்என அருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 3

விரிவுறு காரிய உபாதிகள் எல்லாம்
வேறுசெய் தறிவிராட் புருடனை எனவுங்
கரியது ஆகிநின் றன்னவை முழுதுங்
கழன்றன சம்சர்க்க வாக்கியம் அதனால்,
துரியம துனை அறி தொம்பத மகேசர்
சொல்லுற் றுனை சோதியில் என்னைப்,
பரநன விம்கர மணிஎன அருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 4

காலமு மாதுரு மாகமு மேயமுங்
கண்டனன் என்னில்இ ரசத மாயை,
மெலொடு கீழ்பக்கம் மேவிடு பின்முன்
விரிவுறும் அவைபவம் ஆயின எல்லாஞ்,
சாலவும் இரணிய கர்ப்பமும் இதுதான்
சதாசிவ காலப ரன்கன விதுஎப்,
பால்உயர் காரண உபாதிஎன் றருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 5

இதம்அகம் அறஇரு இவணம்என் றருளி
எழில்பர சுழுப்திகா ரணுதியற் றதுவாம்,
அதீதம திதுஅச கல்லக்க ணையால்
ஆசறு சொல்லுறு பாழ்இரண் டாம்பாழ்,
பொதுவது புகவது போக்தடம் அன்றிப்
போதமு மழுங்கும்அவ் வியாகிருதம் இறுகல்,
பதிஉடல் சதாசிவ பராசத்தி அருளப்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 6

அருவமும் உருவமும் ஆகிய பொருளே
    அதீதம்என் றருளிய தழித்தது அறிந்த,
பொருள்உணர் வதுபரம் விசிட்ட வாக் கியத்தாற்
    பொருவில்சிற் சொரூபந்தற் பதப்பொரு ளதுவாம்,
இருநிலன் எனமுதல் அருளிய பரிசே,
    எழில்இரு பூரணத் தியல்குரு நனவில்,
பரம்உற எனதெழு பயம்அறுத் தருளப்
    பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 7

மலம்அறு குருபதக் கனவினின் மருவு
    மாசறு மானவ சாத்திகம் அதனால்,
உலகமொ டுயிருதன் மாத்திர பரம்ஆய்
    உணர்ந்தது வேப்ரசா பத்திஎன் றருளி,
நிலவிய பரமம தாய்அவை முழுது
    நிகழ்ந்திட எற்கென நெடியவர் முதலே,
பலஉல கண்டதும் இதுஎன அருளப்
    பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 8

சீரார்ச கதசகல் லக்ஷணை அதனாற்
    செகமுழு தண்டதோர் செருக்கற மிகவே,
ஏர்குரு சுழுத்தியில் இருந்துப சாந்தம்
    இருபதப் பொருளும்ஒன் றுக்கின் றெனவிர,
ஓர்உடல் உயிர்அறி ஒன்பர முழுதும்
    ஒன்றுமுப் பாழ்உரை இறந்திடம் அதுவாய்ப்,
பாரியல் சமைவுபி ருதுவிஎன் றருளப்
    பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 9

ஆரண முடிவினில் அசிபதப் பொருளே
    அருளுமுப் பூரண பூஜாபி ஷேகச்,
சீரணி அடிகள்என் சென்னியிற் சேர்த்திச்
    செறிதர அகண்டவாக் கியம்அத னால்அப்,

பூரண துரியம்என் மோநகல் விழியாற்
புணர்குரு சத்தியம் ஆதிஉற் பலத்திற்,
பார்என நடித்துனில் ஐயிக்கியம் ஆக்கும்
பரிபூர்ண னேபள்ளி எழுந்தரு ளாயே. 10

பரிபூர்ணப் பிரகாச நாயனார் திருப் பள்ளி எழுச்சி முற்றிற்று.



## சொரூபாநந்த சுவாமிகள் திரு எம் பாவை.

வெண்டளையான் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா

எல்லையிலாப் பாவகத்தால் எத்தனையோ காலமுநான்
மல்கிய வல்வினையா மாயமலர்ப் பள்ளியிலே,
புல்லித் துயின்று புரையாய பொய்ப்பிறவித்
தொல்லைக் கனவிற் றுயர்உழந்து சோர்வேனை,
அல்லிக் கமலத் தயன்மால் அறிவரியான்
கல்லைப் பிசைந்து கனிஆக்கும் விச்சையினாற்,
சொல்அற்று நின்று சுடரும் உணர்வாக்கி
மெல்லத்தான் மிக்கானைப் பாடேல்ஓர் எம்பாவாய். 1

நில்லாத செல்வத்தை நித்தம்எ னுங்கருத்தாற்
பொல்லா விடயத்தே புக்குரங்கு கின்றேனைச்,
சொல்லான் மநத்தால் தொடர்வரிய நற்சிவம்வந்
தெல்லை எழில்திகழு மேனி யதுசாத்தி,
நல்லான்ஓர் பாகன்ஆய் நாதன் வலஞ்சுழியான்
வல்லாளன் என்னை எழுப்பி உணர்வாக்கி,
ஒல்லாத பாவனையின் உள்ளே உறஅழுத்தி
எல்லாங் கழற்றியவா பாடேல்ஓர் எம்பாவாய். 2

அஞ்ஞான மூடி அகல்கின்ற ஆர்இருளாம்
பொய்ஞ்ஞானம் என்னும் புரையில் துயிலாதே,
மைஞ்ஞாண் அரையான்நல் பார்ப்பதிஓர் பாகத்தான்
எஞ்ஞான முங்கடந்த எந்தை வலஞ்சுழியான்,

செஞ்ஞாயி றென்னத் திகழும்பொற் சேஅடிகள்
அஞ்ஞான மாய எழுந்ததுகாண் ஆயிழையீர்,
மெஞ்ஞானம் ஆகநமை வேதித்த மெய்அருளே
பஞ்ஞா உளம்உருகிப் பாடேல்ஓர் எம்பாவாய். 3

அறியாமை என்னும் அழியாத மாயப்
பிறியா வினையில்இனந் துஞ்சுதியோ பேதாய்,
முறியாத இன்ப முழுவெள்ள முன்னேன்
செறிவாரைத் தான்ஆகச் செய்யும் பெருமான்,
சிறியோமை ஆண்டருளுந் தேசிகன்ஆய் வந்தான்
வெறிஆர் குழன்மடவாய் வெய்யஇருள் மாண்ட.
நறிவாய் எழுந்துகாண் ஆனந்த வெள்ளக்
குறைபா நிறைவினையே கூறேல்ஓர் எம்பாவாய். 4

கோதாடும் இன்சொற் குதலைக்கி ளிமொழியார்
வேதான மையலிலே வீழ்ந்தே கிடப்பேனை,
ஞாதாஅ ருஞ்சிவன் நாதன் வலஞ்சுழியான்
பாதார விந்தப் பராஅமிர் தம்பணித்து,
மாதா எனமுன்னி வந்தெடுத்தாட் கொண்டருளிப்
பாதாளம் ஏழ்உலகும் மேல்நில்நிலமும் பாஎவையும்,
நீதான் எனஅருளி நித்தமாந் தன்நிலைமை
ஓதாமை ஓதியவா பாடேல்ஓர் எம்பாவாய். 5

மேன்மை குலங்கல்வி விழுப்பம் எனுஞ்செருக்கால்
மாகம்ஏ னுமையலுளே வாளா கழிவேனை,
நான்மறைகள் நாடரிய நற்சிவன்ஓர் மானிடனாய்
வானவருங் காணா மலர்அடிஎன் சென்னிமிசைத்,
தான்அமர வைத்துத் தமியேனை ஆண்டருளி
ஞாகம்உடன் ஞேயம்அற ஞாதுருஅஞ் ஞாகம்அழித்,
நானமு பூதினையும் அங்கே அறவிழுங்கித்
தான்முழுதும் ஆனவா பாடேல்ஓர் எம்பாவாய். 6

மண்ஆகி வான்ஆய் வளிஆய் எரிநீர்ஆய்
எண்ஆகி எல்லா உவுயிர்க்குயிராய் நின்றானை,
நண்ணாது நாயேன் நடலைப் பிறவிதனில்
புணைமூடி வைத்த புழுஆர் குரம்பையினின்,
றெண்ணா தழிவேனை எந்தை வலஞ்சுழியான்
கண்ணார் அமிர்தன் கழல்காட்டி ஆண்டருளி,
உன்னோர் உணர்வாக்கி ஓர்வரிய பாவனையும்
பண்ணா அழித்தானைப் படேல்ஓர் எம்பாவாய். 7

முத்தனை மூலத்த னிச்சுடரை முற்றுமாஞ்
சுத்தனைச் சோதிசொ ரூபானந் தக்கடலை,
எத்தன்மை யோருக்கும் எய்தரிய சேஅவடியை
இத்தன்மை யோர்சிறியோர் என்னாத னித்தருளும்,
பித்தனைப் பேதம் அபேதம் உபயம்அற
ஒத்துணர்வே ஆக்கி ஒழியா நிறைவளித்த,
நித்தனை நின்மலனை நீடொளியை நிர்க்குணனை
அத்தனை ஆர்அமிர்தைப் படேல்ஓர் எம்பாவாய். 8

தானே முழுதாய்த் தழைத்துமுத லிச்சிதையா
வானோர் பெருமான் வலஞ்சுழியான் என்றென்றென்,
ஊனே அரும்பி விழுந்தெழுந் தோஅலறேன்
வானோரு மண்ணோரு மற்றெவருந் தாம்அறியாத்,
தேன்ஆர் மலர்அடிஎன் சென்னியி னிற்பொறித்து
நான்ஆகி நின்றக டுவுநி லைஅழித்துத்,
தேனே அமிர்தமே கன்னல்சேர் இன்சுவையே
கோனே ஆய்நின்றவா கூறேல்ஓர் எம்பாவாய். 9

கல்விஎனும் பல்கடலில் காவல்அமிர் தம்பருகி
எல்லையில்பல் சமயத் தெய்த்தே கழிவேனை,
அல்லல்அறத் தன்கருணை ஆர்அமிர்தத் துள்அழுத்தி
நல்லமலர்ப் பாத நாயேற் கினிதளித்துச்,
செல்லல்அறத் திருத்தித் தேற்றி உணர்வாக்கி
மெல்லவியோ மத்தழுத்தி மிகுவே தகத்தே,
செல்ல அளித்த சிவபெருமான் தன்கருணை
எல்லையி லாதவா பாடேல்ஓர் எம்பாவாய். 10

கற்போலு நெஞ்சங் கரையக் கருதரியான்
    இப்பால் உருவாகி என்னுள் புகுந்தருளித்,
தற்பாற்ப டுத்திச்ச துர்அழித்துத் தானெனக்குச்
    சொற்பால் மனப்பால் கருதிப்பால் என்றியம்பும்,
அப்பாலைக் கப்பால்அவ் ஆனந்தம் ஆக்கியஅப்
    பொற்பே நினைந்து புதைத்தலறிப் போதநந,
அப்பா அடியேனை ஆண்டசொரு பாநந்தா
    ஒப்பார் இலாதாய் என்றேடேல்ஓர் எம்பாவாய். 11

களியாத இன்பக்க ளியாகும் அன்பர்க்
    கொளியாகும அலைாதார்க் குள்ளத்தே நின்றும்,
வெளியாகான் நாயேனை ட்டவா சொல்லிக்
    களியாது பாவியேன் கல்என்ன நெஞ்சின்,
ஒளிஆகி உள்ளின் றுருக்கிக்க ரைத்தான்
    அளியோ அளவில்லை அந்தோ தரியேன்,
தெளிவாகி ஒத்துணர்வாய்த் தேன்ஊறுஞ் செய்ய
    அளிசேர் அமிர்தைமுகக் தாடேல்ஓர் எம்பாவாய். 12

ஒன்றாகி வேறாய் உருவாய் அருஆகி
    அன்றாகி யாமாய் அழிவாகி ஆக்கமும்ஆய்க்,
குன்றாத சீர்ஆய்க் குறைவாய் நிறைவாகி
    நின்றான் உயிர்கட் குயிராய் ஒழிவின்றி.
என்றுஎன் எம்மைப்போன் மானிடனாய் வந்தருளிப்
    பொன்றுமே நாயேனைப் போதவ டிவாகத்,
தன்தாள் இணைஅருளில் அல்லதுசா ரஒண்ணா
    என்தாதை என்அரசென் றுடேல்ஓர் எம்பாவாய். 13

எங்கோன் வலஞ்சுழியான் என்றென் றிராப்பகலா
    நங்கோல் வனைசோர நாயேற்கு முன்வந்து,
தங்கோலங் காட்டித் தமியேற் கறிவருளி
    அங்கே அமர்தூறும் ஆனந்தத் துட்கலந்,
திங்கே எமைச்செய்த தென்னென் பறுத்துரைப்போம்
    அங்கோர் அவனை அறியாதார் மால்அயனும்,
இங்கே இவர்அறிதல் பித்தென் றுலகரற்ற
    நங்கோன் அருள்கடல்சேர்ந் தாடேல்ஓர் எம்பாவாய்.

ஆரா அமிர்தை அடியேற் கெளிவந்த
பேரா ஒளியைப் பிதற்றி நினைதோறும்,
நீரா உருகிஎன் ஆவிநெ டுங்கண்கள்
சோரா விதிர்விதிராச் சொல்தளர்ந்து மெய்அரும்பத்,
தாராய் எனஅலறேன் தாபரிவேன் மேன்மேலும்
ஆராக நான்உன் அடியார்கள் முன்அந்தோ,
தீராத தீவினையைத் தீர்த்த சிவக்கனியே
ஆராத அன்பை அருளேல்ஓர் எம்பாவாய். 15

பொன்னார் அடியானே போற்றினர்க்கு மெய்ப்பொருளே
அன்னார் அமிர்தத் திரளே அடியேனைக்,
கன்னார் உரித்த கருணைத் தடங்கடலே
அன்னைநான் ஆவா அறியேன் அழிந்தொழிந்தேன்,
பண்ணார் அமிர்தப் பரங்கருணைத் தேன்பருகி
நின்ஆர் அடியவரு நீயும்எ ழுந்தருளி,
என்ஆவல் தீரஎழி லாருங் கூட்டத்தை
மன்னே யருள்மற்று வேண்டேல்ஓர் எம்பாவாய். 16

வானோர் பிரமன் புரந்தரன்மால் மற்றெவருங்
கானே படர்ந்துலர்ந்தும் புற்றெழுந்துங் காண்பரியான்,
ஊனே வடிவாய் உழலும்எனைத் தான்வந்து
தேன்ஆர் மலர்அடிஎன் சென்னியி னிற்சேர்த்து,
நானேநீ என்றருளி நம்மைஅழித் தாட்கொண்ட
கானே அமிர்தே கரும்பே எனவிரும்பி,
ஊனேஉருகி ஒழியாத நற்சொருபத்
தேனே பருகிமகிழ்ந் தாடேல்ஓர் எம்பாவாய். 17

தோற்றும் பொருள்முழுதும் என்கண்ணில் தோற்றியபின்
ஆற்ற அவைமுவதும் யானே பிறிதில்லைத்,
தோற்றும் பொருளுஞ் சொருபம் எனஉரைத்தாய்
ஏற்றிய இப்பொருள்நீ ஆமாறென் என்றார்க்குத்,
தோற்றுவதுன் கண்ணாலே பார்த்துத் துணியின்அல்லாற்,
சாற்றுவதென் அந்தோ சங்கரா ஆற்றுகிலேன்,
தேற்றத் தெளிவே திகழ்ந்துருகா என்மனக்கல்
ஊற்றத்தை ஒல்க உருகேல்ஓர் எம்பாவாய். 18

அன்று அயிர்த்த அடியேனை ஆண்டருளிக்
கண்ஆகி என்தன் கருத்தழித்த கற்பமே.
உன்று அயிர்த்த உடையானை உன்தனைநான்
கண்ஆரக் கண்டு களித்தேன் கருதரியாய்,
பெண்ணோ அலிஉருவோ ஆணோ பிறவெவையோ
எண்ணொலி யாய்நின்றார்க் கென்உரைக்கேன்
[எம்பெருமான்,
விண்ணோர் அயர வினையேனை ஆண்டதிறம்
அன்று அடியேற் கருளேல்ஓர் எம்பாவாய். 19

போற்றிஎன் சென்னிபொ றித்தசெஞ் சேஅடிகள்
போற்றிஎன் சிக்கைப்பு ரைஅறுத்த பொன்அடிகள்,
போற்றிஎன் உள்ளம்பு குந்தம லர்அடிகள்
போற்றிஎன் உள்ளம் அழித்தசெம் பொன்கழல்கள்,
போற்றி உணர்வாகி நின்றபொன் தாமரைகள்
போற்றிவி யோமமும்ஆயப் போய்மிகுத்த பூங்கழல்கள்
போற்றிரு றையாகி றையாத பேர் இன்பம்,
போற்றி புகழ்ந்துருகி ஆடேல்ஓர் எம்பாவாய். 20

சொரூபாநந்த சுவாமிகள் முதல் திரு எம் பாவை முற்றிற்று.



# சொருபாநந்த ஸ்வாமிகள் இரண்டாந் திரு எம் பாவை.

வெண்டளையான் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா



ஓத அறிதென் றுமயிடதங்கள் ஓதுபொருள்
பாதம் அளித்த பரிசினை யாம்பாடப்,
பேதையர் போலத் துயிலுதியோ பெய்வளையாய்
காதன் திருநாமங் கேட்டலுமே காட்டங்கள்,

ஓதம் எடுப்ப உரோமஞ் சிலிர்த்துருகுஞ்
 சூதன கொங்கைச் செயல்சொல்ல லாம்அளவோ,
ஈதே அருள்பெற்றாய் ஆரே இவள்அல்லால்
 மாதே வனை வியந்து வாழ்த்தேல்ஓர் எம்பாவாய். 1

சிட்டம றைப்பொருள்தன் சீர்அடியார் கூட்டத்தை
 என்தடனைப் போதும் பிரியாய் இதுகாலை,
மட்டலர் கோதாய் வளருதியோ மாதர்
 எட்டியோ சந்துக் கிரவிக்கு மின்மினியோ,
கட்டக்கு ளப்படிநீர் கங்கைப்பு னற்கொப்போ
 வட்ட உருவன் அடியார்குழா நான்கூடு,
மட்டமோ ஈதொழிய வாய்வந்த வாறுங்கள்
 இட்டமே சொல்லும் எமையேல்ஓர் எம்பாவாய். 2

இந்திரசா லப்பி றப்பறுக்க எம்டோல
 வந்தபெ ருமானை வாழ்த்துதொறும்
 [வாழ்த்துதொறுஞ்,
செந்தழல்சேர் மெழுகாஞ் செல்வி கடைதிறவாய்
 எந்தரமும் அன்புக் கிசையாதே ஆயிடினு,
முந்தும்உரை பொய்யாமை உண்டாக எங்கட்குங்
 கந்தமலர்க் குழலி கைதவம் அல்லகாண்,
சிந்தையில் உண்மை திருஉள்ள மேஅறியும்
 எந்தம் விருப்பமும்இங் கீதேல்ஓர் எம்பாவாய். 3

திண்ணம்ஆ ஆணோ அலியோ தெரிவையோ
 வண்ணந்தான் செய்த்தோ வெளிதோ மரகதமோ,
அண்ணிதோ சேய்த்தோ அருவோ உருவோஎன்
 றெண்ணி அறியா திமையோர்கள் ஏமாக்கக்,
கண்எதிரே வந்தாண்ட கண்ணைக்க ருமணியைப்
 பண்ணைச் சுவையின் பயனையாம் பாடஉன்,
கண்ணுக் துயிலுமோ கண்ணார் அமிர்தான
 வண்ணனை வாய்ஆரப் பாடேல்ஓர் எம்பாவாய். 4

வாட்டடங் கண்ணி வளருதியோ வானவர்கள்
 கேட்டும் அறிவரிய கேடில்வி ழுப்பொருள்தான்,
காட்டிக்க முல்எமது கண்களிப்பச் சென்னிமிசை
 சூட்டிக்க ரணங்கள் எல்லாமுந் துஞ்சும்வகை,

மீட்டவ ருக்குந்தன் மெய்உணர்மெய்ஞ் ஞான
நாட்டம் அளித்த நலனு நவில்தோறும்,
வாட்டடங் கண்பனிப்ப வாய்ஆர நாம்பாடித்
தீட்டு நுதலாய் திறவேல்ஓர் எம்பாவாய். 5

எல்லை இருவர்க் களப்பரி தாய்நின்று
சொல்லும் பொருளுங் கடந்த சுடர்ஒளிநம்,
அல்லல் பிறவிஅற ஆர்அருளால் ஐம்புலனும்
புல்லத் திருமேனி சாத்திப் பொலன்கழல்தந்,
தெல்லையில் இன்பத் தழுத்தி எமைஆண்ட
வல்லபம் பாடி வழுத்த மடமாதே,
கல்லும் உருகாதோ கண்ணுக்குங் கண்ணானை
எல்லாம்ஆய் அல்லானைப் பாடேல்ஓர் எம்பாவாய்- 6

வேதமு டிவுக்கு மேலாய விண்ணவர்க்கும்
ஈதென் றுணர்வரியான் எங்கட் கெளிவந்த,
நாதனை அல்லால் நவிலாய்கல் அன்பர்சொலுங்
கீதம் அலால்செவியில் கேளாய்நீ கேள்தொறுங்கண்,
ஓதம்எ டுக்க ஒழியாய் உடையான்சீர்
ஓதஉ ணராது லகத்தார் போல்நீயுஞ்,
சீதம லர்அமளி சேரப் பெறுதியோ
மாதேது யில்உணர்ந்து வாழ்த்தேல்ஓர் எம்பாவாய், 7

ஆதிம றைப்பொருட்குன் அன்புடைமை எப்போதும்
மாதே குலவும் பரிசு மறந்தனையோ,
மேதினியோர் அந்தரத்தில் உள்ளோர் விசும்புள்ளோர்
பாதலத்தோர் இயாவர்களுங் காணாப்ப ரஞ்சுடர்இப்,
பூதலத்தே போந்தருளிப் பொன்னங் கழல்அளித்த
நீதிஎலா நின்று கெடும்போது நின்கடைக்கே,
ஓத உணராய் உடையானுக் கன்புடைமை
ஈதே இருக்கும் பரிசேல் ஓர் எம்பாவாய் 8

மாயவற்கும் போதின் மறையவற்கும் வானவர்க்கும்
ஆமம றைக்கும் அரியாய் எமக்கெளியாய்,
நேயமிக நின்னை நினைதோறு நெஞ்சுருகத் [கண்ணீர்,
தூயசொரு பன்என்றுயாருஞ் சொல்லுதோ றுங்

பாய கினது பழஅடியார் எங்கட்கு
நாயகர் ஆகஅடி நாயோங் தலையாலே,
தூய அவர்பதத்தால் ஏவுங்தொ ழில்செய்ய
ஏயிற் பிறவி இனிதேல்ஓர் எம்பாவாய். 9

ஆராய மேனுள் அடியு மணிமுடியு
நாரா யணருக்கும் நான்முகர்க்கும் ஒண்ணுத,
சீரானைச் செப்புவகை என்னென்று முன்னமறை
ஓர்ஆ யிரமுகத்தால் ஓதஉ ருநாம,
நோராக இல்லாத நிர்க்குணனைச் சொற்கொடுநாம்
பேர்ஆ யிரம் உடையான் என்றுரைத்தோம்
பேதமையால்,
ஓர்நாமம் ஓர்உருவம் ஒன்றும்இலா ஒண்கடரை
ஆர்நாம் பரவ அறிந்தேல்ஓர் எம்பாவாய். 10

வாசம லர்ப்பொய்கை புக்குவ ளைக்கரமுங்
தூசுங்க லனும் ஒலிப்பத்து டும்எனப்பாய்ங்,
தீசர்க்கும் ஈசன்என் றேமறைகள் ஏத்துகின்ற
தேசன்தி ருமேனி சாத்தித்தி ருஅருளால,
பாசம் அறநயனப் பங்கயத்தால் பார்த்தருளிக்
கூசாமற் சென்னிமிசை வைத்துக் குரைகழல்கள்,
வாசகம் ஒன்றினுல் வாசாம கோசரத்தைப்
பேசிய வாபாடி ஆடேல்ஓர் எம்பாவாய். 11

ஆர்த்த பிறவி அறுத்தருள ஆர்அருளால்
பார்த்த திருநயனப் பங்கே ருகம்பாடிச்,
சேர்த்த திருக்கை மலர்பாடிச் சென்னிமிசை
ஆத்தமா வைத்த அருட்சே அடிபாடி,
ஓர்த்த அருமறைகள் ஓர்ஆ யிரமுகத்தால்
ஏத்த அரும்பொருள்நாம் ஈதென்று காணஒரு,
வார்த்தை அருள்செய்த மாவல் லபம்பாடிப்
பூத்த புனல்தடம்பாய்ங் தாடேல்ஓர் எம்பாவாய். 12

அங்கயன்மேல் ஆதலால் ஆர்உயிர்க்கா தாரத்தால்
எங்குக்து றையாய்இ ருத்தலால் முத்திவருஞ்,
சங்கங் குலவுதலால் தண்ணளியால் தன்கணே
அங்கமலம் ஆதலால் அங்கமலம் போக்கலால்,

அங்கழுநீர் உண்மையால் அந்தணர்கொண் டாடுதலால்
எங்கோனே என்ன எழிலார் இருஞ்சுனையின்,
மங்காமை நம்மை வலிந்தாள வந்தருளும்
பங்கே ருகம்பாடி ஆடேல்ஓர் எம்பாவாய் 13

ஓசையாய் ஊறுய் உருவாய் உறுசுவையாய்
வாசம்ஆய் வாக்காய் மனம்ஆகி மன்உயிர்ஆய்ப்,
பாசம்ஆய் வீடாய்ப் பகல்ஆய் இரவாகி
ஈசன்ஆய் யாவர்க்கும் எல்லாம்ஆய் அல்லாத,
தேசன் சிறியேற்குச் செம்பொற் கழல்அளித்த
நேச அருளை நினைந்து நினைந்துருகி,
ஈசனை வாய்ஆர எப்போதும் யாம்பாடி
வாச மலர்த்தடம்பாய்ந் தாடேல்ஓர் எம்பாவாய். 14

வானயகம் பணிக்கும் வாழ்த்து மனங்கவர்ந்தான்
ஆண்அலி பெண்அல்லான் எனினும் அழகியவா,
காணீர்என் கண்ணாலே என்னும் கனிகூரு
நாணம் இழந்தாள் நறுநுதலாள் தன்நகையும்,
காணாள் கலைபேணாள் கற்பனையுந் தான்கேளாள்
ஊண்காணும் உறக்கும் ஒழிந்தாள்மற் றும்பரையும்,
பேணாள் இவளிஇங்ஙன் பித்தேற்றும் பெற்றியனைத்
தாணுவை யாம்பாடி ஆடேல்ஓர் எம்பாவாய். 15

வானகமும் வையகமும் எல்லாம றைப்பொருள்தான்
போனகம்ஆக் கியவா போலப் புணரிஎலாம்,
பானம் பருகி எழுந்து பரன்போல
வானை அறவிறைந்து மாமாயா வல்விளை,
மேனி மிகக்கருகி மெய்உளம்போல் வில்விட்டு
ஞானம்போல் மின்னிஅரு நான்மறையின்
ஏர்முழங்கித்,
தான்அந்தம் இல்லாதான் தந்தஆ னந்தத்தை
மானப் பொழியாய் மழையேல்ஓர் எம்பாவாய்.

வானோர் நுங் கோனுங் மலரோனு மாலோனும்
ஏனோருங் காணா விறைவன் திருஅருளால்,
ஞாலோ தயமுன்னர் ஞாலம்போல் ஞாயிறெனும்
பானு தயத்தில் பனிமதியந் தாரகையாம்,
மீன்ஏ குவபோல் விழியால் வினைநீக்கி
ஊனோர் உயிர்உடைமை கைகொண்
டொருமொழியால்,]
தானாகத் தந்தருளும் தம்பிரான் தாள்பாடி
மானே மலர்த்தடம்பாய்க் தாடேல்ஓர் எம்பாவாய். 17

மிதியாகச் சென்னிமிசை வேதா கமங்கள்
இதிகாசம் எல்லாம் எடுத்துரைத்த இன்பக்,
கதிகாண நாமும்எலாங் கைக்கனிபோல் காட்டி
விதியோனு மாலும் விடையோனும் ஒன்று,
முதியோர் பரவிவரு மூவர் பதமும்
மதியேம் எனநம்மை வாழ்வித்த நாதன்,
பதியா நமக்களித்த பங்கயத் தாள்பாடி
மதுஆர் மலர்த்தடம்பாய்க் தாடேல்ஓர் எம்பாவாய். 18

அந்தா மரைஅயனு மாலும் அறிவரிய
செந்தா மரைப்பதகஞ் சென்னி உறச்சேர்த்திச்,
சிந்தா குலந்தீரச் செய்து செழுஞான
நந்தா அமிர்தான தன்னைஞா நக்கண்தக்,
திந்தாபார் என்றநனி இப்படியே நாம்வாழத்
தக்தானை பாடித் தழுதழுந்து நாட்டநீர்,
சிந்தா உருகாநஞ் சிந்தை களிகூர
நந்தா மலர்த்தடம்பாய்க் தாடேல்ஓர் எம்பாவாய். 19

அன்னையே வேண்டு மகப்போல் அடியேங்கள்
உன்னை இரப்போம் உவந்துவந் துள்ளத்தால்,
நின்அன்பர்க் காள்ஆய் யாம்நித்தம் பணிசெயநின்
பொன்னங் கழல்கட் புலன்விட்டுப் போகாதே.

மன்ன மகங்களிப்ப வாய்ஆர வாழ்த்திடநின்
    சின்னங்கள் கேட்பச் செவிசிந்தை தீமெழுகே,
என்ன உருக அருளுதியேல் எம்பெருமான்
    இன்னம் பிறக்கை இனிதேல்ஓர் எம்பாவாய். 20

தாரணி வான்முழுதுந் தந்தாய் சரண்போற்றி
    பார்அணையப் பண்ணுநின் பாதம லர்போற்றி,
ஓர்அணுவாம் அண்டம்என ஓங்கும் பதம்போற்றி
    சேர்அணுவும் அண்டமா சேரியதாக் தாள்போற்றி,
காரணத்தின் காரணமாங் கண்ணே கழல்போற்றி
    ஆரணத்தின் மெய்ப்பொருளாம் ஆதி அடிபோற்றி,
பூரணபோ தச்சொருபா போற்றிஅடி போற்றிஎன்
    நேர்அணவு மார்கழிநீர் ஆடேல்ஓர் எம்பாவாய், 21

இரண்டாந் திருவெம் பாவை முற்றிற்று.

## சூடிக் கொடுத்த நாச்சியார் என்னும்

## ஆண்டாள் பாடிய திருப் பாவை.

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
    நீர்ஆடப் போதுவீர்! போதுமினோ நேர்இழையீர்,
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
    கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்,
ஏர்ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
    கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்,
நாரா யணனே நமக்கே பறைதருவான்
    பாரோர் புகழப் படிந்தேல்ஓர் எம்பாவாய். 1

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்கு
செய்யும் கிரிசைகள் கேளீரோ பால்கடல்உள்,
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்உண்ணோம் பால்உண்ணோம் நாட்காலே நீர்ஆடி,
மையிட் டெழுதோம் மலர்இட்டு நாம்முடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்,
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேல்ஓர் எம்பாவாய். 2

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினால்,
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்(து)
ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடுகயல் உகளப்,
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி,
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேல்ஓர் எம்பாவாய் 3

ஆழி மழைக்கண்ணா! ஒன்றும்நீ கைகரவேல்
ஆழியுள் புக்குமு கந்துகொ(டு) ஆர்த்தேறி,
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோள்உடைப் பற்பநா பன்கையில்,
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்,
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீர்ஆட மகிழ்ந்தேல்ஓர் எம்பாவாய். 4

மாயனை மன்னுவ டமதுரை மைந்தனை
தூயபெ ருநீர் யமுனைத் துறைவனை,
ஆயர்கு லத்தினில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனை,
தூயோம்ஆய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேல்ஓர் எம்பாவாய். 5

புள்ளும் சிலம்பினகாண் புள்அரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேர்அரவம் கேட்டிலையோ,
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலைநஞ் சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி,
வெள்ளத் தரவில் துயில்அமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்,
மெள்ள எழுந்து அரிஎன்ற பேர்அரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேல்ஓர் எம்பாவாய். 5

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தம்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே,
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாசநறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்,
ஓசை படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?
நாயகப்பெண் பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி,
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ
தேசம் உடையாய் திறவேல்ஓர் எம்பாவாய். 7

கீழ்வானம் வெள்ளென்(று) எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்,
போவான் போகின்றாரைப் போகாமல் காத்(து) உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் கோதுகலம் உடைய,
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய,
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆஅஎன் றாராய்ந் தருளேல்ஓர் எம்பாவாய். 8

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்
தூபங் கமழத் துயில்அணைமேல் கண்வளரும்,
மாமன் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை எழுப்பீரோ? உம்மகள்தான்,
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப்பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?,
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று
நாமம் பலவும் நவின்றேல்ஓர் எம்பாவாய். 9

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்,
நாற்றத் துழாய்முடி நாராய ணன்நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்,
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பக ரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ.
ஆற்ற அனந்தல் உடையாய் அருங்கலமே
தேற்றம்ஆய் வந்து திறவேல்ஓர் எம்பாவாய். 10

கற்றுக்க றவைக்க ணங்கள்ப லகறந்து
செற்றார் திறல்அழியச் சென்று செருச்செய்யும்,
குற்றம்ஒன் றில்லாத கோவலர்தம் பொன்கொடியே
புற்றர வல்குல் புனமயிலே போதராய்,
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்,
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டிநீ
எற்றுக்கு றங்கும்பொ ருளேல்ஓர் எம்பாவாய். 11

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர,
நனைத்தில்லம் சேறாக்கும் நல்செல்வன் தங்காய்
பனித்தலை வீழநின் வாசல் கடைபற்றிச்,
சினத்தினால் தென்இலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்,
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேர்உறக்கம்
அனைத்தில்லத் தாரும் அறிந்தேல்ஓர் எம்பாவாய். 12

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்,
பிள்ளைகள் எல்லாரும் பாவைக்க ளம்புக்கார்
வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று,
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்துநீர் ஆடாதே,
பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நல்நாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேல்ஓர் எம்பாவாய். 13

உங்கள்பு ழக்கடைத் தோட்டத்து வாவியுள் [காண்,
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின
செங்கல்பொ டிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்,
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாஉடையாய்,
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேல்ஓர் எம்பாவாய், 14

எல்லே இளங்கிளியே இன்னம் உறங்குதியோ
சில்என் றழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன்,
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாய்அறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக,
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடைய [கொள்,
எல்லாரும் போந்தாரோ போந்தார்போந் தெண்ணிக்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேல்ஓர் எம்பாவாய். 15

நாயகன்ஆய் நின்ற நந்தகோ பன்உடைய
கோயில்காப் பானே கொடித்தோன்றும் தோரண,
வாயில்காப் பானே மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை,
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோம்ஆய் வந்தோம் துயில்எழப் பாடுவான்,
வாயால்முன் னமுன்னம் மாற்றாதே அம்மாநீ
நேசநி லைக்கதவம் நீக்கேல்ஓர் எம்பாவாய். 16

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான் நந்தகோ பாலா எழுந்திராய்,
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே
எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்,
அம்பரம் ஊடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே உறங்காது எழுந்திராய்,
செம்பொன் கழல்அடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேல்ஓர் எம்பாவாய். 17

உந்தும தகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய்,
கந்தம் கமழும் குழலி கடைதிறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்,
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலிஉன் மைத்துனன் பேர்பாடச்,
செந்தா மரைக்கையால் சீர்ஆர் வளைஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேல்ஓர் எம்பாவாய். **18**

குத்துவி ளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேல்ஏறிக்,
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்,
மைத்தடங் கண்ணினாய் நீஉன் மணாளனை
எத்தனை போதும் துயில்எழ ஒட்டாய்காண்,
எத்தனை ஏலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவம அன்று தகவேல்ஓர் எம்பாவாய். **19**

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயில்எழாய்.
செப்பம் உடையாய்! திறல்உடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயில்எழாய்,
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயில்எழாய்!,
உக்கமும் தட்டொளியும் தந்துஉன் மணாளனை
இப்போதே எம்மைநீர் ஆட்டேல்ஓர் எம்பாவாய். **20**

ஏற்றக லங்கள் எதிர்பொங்கும் ஈதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்,
ஆற்றப்ப டைத்தான் மகனே அறிவுறாய்
ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில்,
தோற்றம்ஆய் நின்ற சுடரே! துயில்எழாய்!
மாற்றார் உனக்கு வலிதொலைந்துஉன் வாசற்கண்,
ஆற்றாது வந்துஉன் அடிபணியும் ஆபோலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேல்ஓர் எம்பாவாய்.

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமாக
    பங்கம்ஆய் வந்துநின் பள்ளிக்கட் டில்கீழே,
சங்கம் இருப்பார்போல் வந்துத லைப்பெய்தோம்
    கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல,
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
    திங்களும் ஆதித் தியனும் எழுந்தால்போல்,
அங்கண் இரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்
    எங்கள்மேல் சாபம் இழிந்தேல்ஓர் எம்பாவாய். 22

மாரிம லைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
    சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,
வேரிம யிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
    மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்,
போதரும்ஆ போலேநீ பூவைப்பூ வண்ணாஉன்
    கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய,
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த
    காரியம் ஆராய்ந் தருளேல்ஓர் எம்பாவாய். 23

அன்றிவ்வு லகம்அ ளந்தாய்! அடிபோற்றி
    சென்றங்குத் தென்இலங்கை செற்றாய் திறல்போற்றி,
பொன்றச்ச கடம்உ தைத்தாய்! புகழ்போற்றி
    கன்றுகு ணிலாஎ றிந்தாய்! கழல்போற்றி,
குன்று குடையா எடுத்தாய்! குணம்போற்றி
    வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி,
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
    இன்றுயாம் வந்தோம் இரங்கேல்ஓர் எம்பாவாய். 24

ஒருத்திமகன் ஆய்ப்பி றந்(து) ஓர்இரவில்
    ஒருத்திமகன் ஆய்ஒளித்து வளரத்,
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
    கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்,
நெருப்பென்ன நின்ற நெடுமாலே உன்னை
    அருத்தித்து வந்தோம் பறைதருதி ஆகில்,
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
    வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேல்ஓர் எம்பாவாய். 25

மாலே!ம ணிவண்ணா! மார்கழிநீர் ஆடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்,
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பால்அன்ன வண்ணத்துன் பாஞ்சசந் நியமே.
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப்பெ ரும்பறையே பல்ஆண் டிசைப்பாரே,
கோலவி ளக்கே கொடியே விதானமே
ஆலின் இலையாய் அருளேலோர் எம்பாவாய். 26

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்,
நாடு புகழும் பரிசினால் நன்றாக
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே,
பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பால்சோறு,
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியி ருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய் 27

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்(து)உன் தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம்உடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோடு,
உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்,
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே
இறைவாநீ தாராய் பறையேலோர் எம்பாவாய். 28

சிற்றஞ்சி றுகாலை வந்துன்னைச் சேவித்துன்
பொன்தாம ரைஅடியே போற்றும்பொ ருள்கேளாய்,
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்தநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது.
இற்றைப்ப றைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழ்ஏழ்பி றவிக்கும் உன்தன்னோ(டு),
உற்றோமே ஆவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய். 29

வங்கக்க டல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள்தி ருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி,
அங்கப்ப றைகொண்ட ஆற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான்
[கோதைசொன்ன,
சங்கத்த மிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப்ப ரிசுரைப்பார் ஈரிண்டு மால்வரைத்தோள்,
செங்கண்தி ருமுகத்துச் செல்வத்தி ருமாலால்
எங்கும்தி ருஅருள் பெற்(று) இன்புறுவர் எம்பாவாய். 30

ஆண்டாள் பாடிய திருப் பாவை முற்றிற்று



# தொண்டர் அடிப் பொடி ஆழ்வார் அருளிச் செய்த திருப் பள்ளி எழுச்சி.

ஸ்ரீ ரங்க நாதனை துயில் உணர்த்துதல்.

எண் சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

(பூபாள ராகம்=அட தாளம்)



கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனைஇருள் அகன்றது காலைஅம் பொழுதாய்,
மதுவிரிந் தொழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்,
அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே,

கொழுங்கொடி முல்லையின் கொழுமலர் அணவிக்
கூர்ந்தது குணதிசை மாருதம் இதுவோ,
எழுந்தன மலர்அணைப் பள்ளிகொள் அன்னம்
ஈன்பனி நனைந்ததம் இருஞ்சிற குதறி,
விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்
வெள்அயி றுறஅதன் விடத்தினுக் கனுங்கி,
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே. 2

சுடர்ஒளி பரந்தன சூழ்திசை எல்லாம்
துன்னிய தாரகை மின்ஒளி சுருங்கி,
படர்ஒளி பசுத்தனன் பனிமதி இவனோ
பாய்இருள் அகன்றது பைம்பொழில் கமுகின்,
மடல்இடைக் கீறிவண் பாளைகள் நாற
வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ
அடல்ஒளி திகழ்தரு திகிரிஅந் தடக்கை
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே. 3

மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்கள்
வேய்ங்குழல் ஓசையும் விடைமணிக் குரலும்,
ஈட்டிய இசைதிசை பரந்தன வயலுள்
இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை,
வாட்டிய வரிசிலை வானவர் ஏறே
மாமுனி வேள்வியைக் காத்துஅவ பிரதம்
ஆட்டிய அடுதிறல் அயோத்திஎம் அரசே
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே. 4

புலம்பின புட்களும் பூம்பொழில் களின்வாய்
போயிற்றுக் கங்குல்பு குந்தது புலரி,
கலந்தது குணதிசைக் கனைகடல் அரவம்
களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கல்அந் தொடையல்கொண் டுஅடிஇணை பணிவான்
அமரர்கள் புகுந்தனர் ஆதலில் அம்மா,
இலங்கையர் கோன்வழி பாடுசெய் கோயில்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5

இரவியர் மணிநெடுங் தேரொடும் இவரோ
    இறையவர் பதினொரு விடையரும் இவரோ,
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ
    மருதரும் வசுக்களும் வந்துவந் தீண்டி,
புரவியோ டாடலும் பாடலும் தேரும்
    குமரதண் டம்புகுந் தீண்டிய வெள்ளம்,
அருவரை அனையநின் கோயில்முன் இவரோ
    அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே 6

அந்தரத் தமரர்கள் கூட்டங்கள் இவையோ
    அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ,
இந்திரன் ஆனையும் தானும்வந் திவனோ
    எம்பெரு மான்உன் கோயிலின் வாசல்,
சுந்தரர் நெருக்கவிச் சாதரர் நூக்க
    இயக்கரும் மயங்கினர் திருஅடித் தொழுவான்,
அந்தரம் பாரிடம் இல்லைமற் றிதுவோ
    அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே. 7

வம்பவிழ் வானவர் வாய்உறை வழங்க
    மாநிதி கபிலைஒண் கண்ணாடி முதலா,
எம்பெரு மான்படி மக்கலங் காண்டற்கு
    ஏற்பன ஆயின கொண்டுநன் முனிவர்,
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ
    தோன்றினன் இரவியும் துலங்கொளி பரப்பி,
அம்பர தலத்தினின் றுஅகல்கின்ற துஇருள்போய்,
    அரங்கத்தம் மாபள்ளி எருந்தரு ளாயே. 8

ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
    யாழ்குழல் முழவமோ டிசைதிசை கெழுமி,
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
    கந்தரு வர்அவர் கங்குலுள் எல்லாம்,
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
    சித்தரும் மயங்கினர் திருஅடித் தொழுவான்,
ஆதலில் அவர்க்குநாள் ஓலக்கம் அருள
    அரங்கத்தம் மாபள்ளி எழுந்தருளாயே. 9

கடிமலர் கமலங்கள் மலர்ந்தன இவையோ
கதிரவன் கனைகடல் முளைத்தனன் இவனோ,
துடியிடை யார்சுரி குழல்பிழிந் துதறித்
துகில்உடுத் தேறினர் சூழ்புனல் அரங்கா,
தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள்தொண்டர் அடிப்பொடி என்னும்,
அடியனை அளியன்என் றருளிஉன் அடியார்க்கு
ஆட்படுத் தாய்பள்ளி எழுந்தரு ளாயே. 10

தொண்டர் அடிப் பொடி ஆழ்வார் அருளிச் செய்த
திருப் பள்ளி எழுச்சி முற்றிற்று.

---

## மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச் செய்த
## திரு எம் பாவை

வெண் டளையான் வந்த இயற் றர வினைக் கொச்சகக் கலிப்பா,
திருச் சிற்றம்பலம்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்,
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய
[வாழ்த்தொலிபோய்,
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம் மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்,
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய். 1

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
　　பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே.
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
　　சீசீ இவையுஞ் சிலவோ விளையாடி,
ஏசும் இடமீதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
　　கூசும் மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்,
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
　　ஈசனார்க் கன்பார்யாம் ஆரேல்ஓர் எம்பாவாய். 2

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
　　அத்தன் ஆநந்தன் அமுதனென் றள்ளூறித்,
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
　　பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்,
புத்தடியோம் புன்மைதீர்த் தாள்கொண்டால் பொல்லாதோ
　　எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ,
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
　　இத்தனையும் வேண்டும் எமக்கேல்ஓர் எம்பாவாய். 3

ஒண்ணித்தி லநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
　　வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ,
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
　　கண்ணைத்து யின்றவமே காலத்தைப் போக்காதே.
விண்ணுக்கொ ருமருந்தை வேதவி ழுப்பொருளைக்
　　கண்ணுக் கினியானைப் பாடிக்க சிந்துள்ளம்,
உண்ணெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்
　　தெண்ணிக் குறையில் துயிலேல்ஓர் எம்பாவாய். 4

மால்அறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
　　போல்அறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்,
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
　　ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்,
கோலமும் நம்மைஆள் கொண்டருளிக் கோதாட்டுஞ்
　　சீலமும் பாடிச் சிவனே சிவனேஎன்,
றோலம் இடினும் உணராய் உணராய்காண்
　　ஏலக் குழலி பரிசேல்ஓர் எம்பாவாய். 5

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே எழுப்புவன் என்றலுமே நாணாமே,
போனதிசை பகராய் இன்னம்பு லர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவரியான்,
தானேவந் தெம்மைத் தலைஅளித்தாள் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்,
ஊனே உருகாய் உனக்கே உறும்எமக்கும்
ஏனோர்க்கும் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய். 6

அன்னே இவையுஞ் சிலவோ பலஅமரர்
உன்னற் கரியான் ஒருவன்இருஞ் சீரான்,
சின்னங்கள் கேட்பச் சிவன்என்றே வாய்திறப்பாய்
தென்னாஎன் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்,
என்ஆனை என்அரையன் இன்னமுதென் றெல்லோமுஞ்
சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந்து
[யிலுதியோ,
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளாகி டத்தியால்
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய். 7

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்,
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ,
வாழிஈ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை யாம்ஆறும் இவ்வாறோ,
ஊழி முதல்வன்ஆய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய். 8

முன்னைப்ப ழம்பொருட்கும் முன்னைப்ப ழம்பொருளே
பின்னைப்பு துமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே,
உன்னைப்பி ரான்ஆகப் பெற்றஉன் சீர்அடியோம்
உன்அடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே
[பாங்காவோம்,

அன்னவரே எம்கணவர் ஆவார் அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்,
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோமேல்ஓர் எம்பாவாய். 9

பாதாளம் ஏழினுங்கீழ் சொல்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப்பொ ருள்முடிவே,
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்,
ஓத உலவா ஒருதோழன் தொண்டர்உளன்
கோதில் குலத்தரன்தன் கோயில்பி ணாப்பிள்ளைகாள்,
ஏதவன்ஊர் ஏதவன்பேர் ஆர்உற்றார் ஆர்அயலார்
ஏதவனைப் பாடும் பரிசேல்ஓர் எம்பாவாய். 10

மொய்ஆர் தடம்பொய்கை புக்குமுகேர் என்னக்
கையால் குடைந்து குடைந்துன் கழல்பாடி,
ஐயா வழிஅடியோம் வாழ்ந்தோங்காண் ஆர்அழல்போல்
செய்யாவெண் ணீருடி செல்வா சிறுமருங்குன்,
மைஆர் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆள்கொண் டருளும் விளையாட்டின்,
உய்வார்கள் உய்யும் வகைஎல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமல் காப்பாய் எமையேல்ஓர் எம்பாவாய். 11

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தன்நல் தில்லைச்சிற் றம்பலத்தே தீஆடுங்,
கூத்தன்இவ் வானுங் குவலயமும் எல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி,
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்,
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொன்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேல்ஓர் எம்பாவாய். 12

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங்கு ருகினத்தால் பின்னும் அரவத்தால்,
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினுல்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த,
பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்,
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேல்ஓர் எம்பாவாய். 13

காதார் குழைஆடப் பைம்பூண் கலன்ஆடக்
கோதை குழல்ஆட வண்டின் குழாம்ஆடச்,
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருள்ஆம் ஆபாடிச்,
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தம்ஆம் ஆபாடிப்,
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத்தி றம்பாடி ஆடேல்ஓர் எம்பாவாய். 14

ஓர்ஒருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள் சித்தங்க ளிகூர,
நீர்ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப் |பணியாள்,
பார்ஒருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்
பேர்அரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆம்ஆறும்
ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தான்
வார்உருவப் பூண்முலையீர் வாய்ஆர நாம்பாடி
ஏர்உருவப் பூம்புனல்பாய்ந் தாடேல்ஓர் எம்பாவாய். 15

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள் |யின்,
என்னத்தி கழ்ந்தெம்மை ஆள்உடையாள் இட்டிடை
மின்னிப்பொ லிந்தெம்பி ராட்டிதி ருஅடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித்தி ருப்புருவம்,
என்னச்சி லைகுலவி நந்தம்மை ஆள்உடையாள்
தன்னில் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு.
முன்னி யவள்நமக்கு முன்சுரக்கும் இன்அருளே
என்னப்பொ ழியாய்ம ழையேல்ஓர் எம்பாவாய் 16

செங்கண வன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்,
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும்எ ழுந்தருளிச்,
செங்கமலப் பொன்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை,
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 17

அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்,
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம்அகலப்,
பெண் ஆகி ஆண் ஆய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண் ஆகி மண் ஆகி இத்தனையும் வேறாகிக்,
கண்ணார் அமுதமும் ஆய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்
றங்கப்ப ழஞ்சொற்பு துக்குமெம் அச்சத்தால்,
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க,
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க,
இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழில்என் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்.

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தம்ஆஞ் செந்தளிர்கள்,
போற்றியெல் லாவுயிர்க்கும் தோற்றம்ஆம் பொன்பாதம்
போற்றியெல் லாஉயிர்க்கும் போகம்ஆம் பூங்கழல்கள்,
போற்றியெல் லாஉயிர்க்கும் ஈறும் இணைஅடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆள் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய். 20

மாணிக்க வாசக சுவாமிகள் பாடிய திருவெம்பாவை முற்றிற்று.

# மாணிக்க வாசக சுவாமிகள

# திருப் பெருந் துறையில் அருளிய

# திருப் பள்ளி எழுச்சி.

திருச் சிற்றம்பலம், திரோதாந சுத்தி

எண் சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்,
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருஅடி தொழுகோஞ்,
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடிஉடை யாய்எனை உடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.

அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயநின் மலர்த்திரு முகத்தின்,
கருணையின் சூரியன் எழஎழ நயநக்
கடிமலர் மலரமற் றண்ணல்அங் கண்ணாம்,
திரள்நிரை அறுபத முரல்வன இவைஓர்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே,
அருள்நிதி தரவரும் ஆநந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே. 2

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்,
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்,
தேவநல் செறிகழல் தாள்இணை காட்டாய்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே,
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே 3

இன்இசை வீணையர் இயாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்,
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்,
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே,
என்னையும் ஆண்டுகொண் டின்அருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4

பூதங்கள் தோறுநின் றாய்எனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்,
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்,
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்,
ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5

பப்பற வீட்டிருந் துணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத் தார்அவர் பலரும்,
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா,
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே,
இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே 6

அதுபழச் சுவைஎன அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரும் அறியார்,
இதுஅவன் திருஉரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்,
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா,
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 7

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் இயாவர்மற் றறிவார்,
பந்தணை விரலியு நீயுநின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே,
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறைஉறை கோயிலுங் காட்டி,
அந்தணன் ஆவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆர்அமு தேபள்ளி எழுந்தரு ளாயே. 8

விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளேஉன தொழுப்படி யோங்கள்,
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி அடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடல்அமு தேகரும் பேவிரும் படியார்.
எண்ணகத் தாய்உல குக்குயிர் ஆனாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 9

புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேஇந்தப் பூமி,
சிவன்உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறைஉறை வாய்திரு மாலாம்,
அவன்விருப் பெய்தவும் அலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையு நீயும்,
அவனியில் புகுந்தெமை ஆள்கொள்ள வல்லாய்
ஆர்அமு தேபள்ளி எழுந்தரு ளாயே.

மாணிக்க வாசக சுவாமிகள் பாடிய திருப் பள்ளி எழுச்சி

முற்றிற்று.

*சிவ மயம்:*

# கலி வெண்பா

## சிவ புராணம் 1 முதல் 95 வரி

### மாணிக்க வாசக சுவாமிகள் செய்த திரு வாசகத்தில் உள்ளது

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க. 10

ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே அடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப்பி றப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீர்ஆர் பெரும்துறை நம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி
சிவன்அவன்என் சிந்தைஉள் நின்ற அதனால்
அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணம்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓயஉரைப் பன்யான் 20

கண்நுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல்இறைஞ்சி
விண்நிறைந்தும் மண்நிறைந்தும் மிக்காய்விளங்கொளியாய்
எண்இறந் தெல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழும்ஆ றொன்றறியேன்
புல்ஆகிப் பூடாய் புழுஆய் மரம்ஆகிப்
பல்விருகம் ஆகிப் பறவைஆய்ப் பாம்பாகிக்
கல்ஆய் மனிதர்ஆய் பேய்ஆய்க் கணங்கள்ஆய்
வல்அசுரர் ஆகி முனிவர்ஆய்த் தேவர்ஆய்ச்
செல்லா நின்றஇத் தாவர சங்கமத்துள் 30

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்அடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரம் ஆய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்ஆய் தணிஆய் இயமானன் ஆம்விமலா
பொய்ஆ யினஎல்லாம் போய்அகல வந்தருளி
மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல் அறிவே 40

ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில்
நாற்றத்தின் நேரிஆய் சேய்ஆய் நணியானே
மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தால் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேன்ஊறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்கள்ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன்
[தன்னை 50

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அரும்கயிற்றால் கட்டிப்
புறம்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலம்சோரும் ஒன்பது வாயில் குடிலை
மலங்கப் புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கும் மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் உருகும்
நலம்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலம்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயில் கடைஆய்க் கிடந்த அடியேற்குத். 60

தாயில் சிறந்த தயாஆன தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேன்ஆர் அமுதே சிவபுரனே

பாசம்ஆம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சம்கெடப்
பேராது நின்றபெ ருங்கருணைப் பேர்ஆறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீர்ஆய் உருக்கிஎன் ஆர்உயிர்ஆய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே. 70
அன்பருக் கன்பனே யாவையும்ஆய் அல்லையும்ஆம்
சோதியனே துன்இருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்உணர்வே
போக்கும் வரவும் புணர்வும்இலாப் புண்ணியனே
காக்கும்எம் காவலனே காண்பரிய பேர்ஒளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய்நின்ற
தோற்றச் சுடர்ஒளிஆய்ச் சொல்லாத நுண்உணர்வாய்,
மாற்றம்ஆம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான உண்ஆர் அமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உள்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா அரனேஓ என்றென்று
போற்றிப்பு கழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்ஆனார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப்பு லக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்இருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லைஉள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே 90
அல்லல் பிறவி அறுப்பானே ஓ என்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள்உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன்அடிக்கீழ்
பல்லோரும் ஏத்தப் பணிந்து 95

சிவ புராணம் முதல் அகவல் பா முற்றிற்று.

# நோன்பு

ஆய்ச்சியர்கள், கோகுலத்தில் ஸ்ரீகண்ணபிரானைக் கணவனாக விரும்பியது போல், ஆண்டாள் யசோதை மைந்தனாகிய கிருஷ்ண பரமாத்மாவைக் கணவனாக விரும்பி அடைந்தாள்.

அதே போல், பாண்டி நாட்டில் மாணிக்க வாசக சுவாமிகளும், தத்துவ ராய சுவாமிகளும், இறைவனையும், சற் குருவையும், நாயகனாகப் பெற விரும்பி அடைந்தார்கள்.

அதே போல், பாண்டி நாட்டில், இராமநாத புரம் ஜில்லாவில், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என்றும், தந வைசியர் என்றும், மகுட தந வைசியர் என்றும், செட்டியார்கள் என்றும், பெயர் விளங்குகின்ற வைசிய வகுப்பார் பெருந் தநவந்தர்களாக இருக்கின்றார். அவர்கள், சைவ வைஷ்ண வேதாந்தம் என்னும் மூன்று கொள்கைகளையும் தொன்று தொட்டே கைக்கொண்டிருக்கின்றார்கள்.

அவர்கள் சமூகத்தில், ஆண்கள் நல்ல மனைவியை அடைய வேண்டும் என்று கார்த்திகை மாதம் கிருத்திகை நக்ஷத்திரத்தன்று ஒரு முறை விரதமிருந்து, குமாரக் கடவுளை நோக்கித் தவங்கிடந்து, கணேசர் ஆலயம், சிவாலயம், சுப்பிரமணியக் கடவுள் ஆலயம், விஷ்ணு ஆலயம், முதலிய தேவாலயங்களைத் தரிசித்து விரத சமாப்தி செய்கின்றார்கள்.

அதே போல், பெண்கள் ஒரு முறை மார்கழி மாதம் திரு ஆதிரை நக்ஷத்திரத்தன்று விரதமிருந்து தேவியை நோக்கித்தவங்கிடந்து, கணேசர் ஆலயம், சிவாலயம், சுப்பிரமணிக் கடவுள் ஆலயம், விஷ்ணு ஆலயம் முதலிய தேவாலயங்களைத் தரிசித்து விரத சமாப்தி செய்கின்றார்கள்.

அதே போல் பெண்கள், மாசி மாதத்தில் பௌர்ணமியிலும், செவ்வாய்க் கிழமையிலும், விரதமிருந்து, சந்திரனையும், ரோஹிணியையும் நோக்கிச் சந்திரனை ரோஹிணி அடைந்தது போன்று, தங்களுக்கும் நல்ல மணவாளன் கிடைக்கவேண்டும் என்று தவங்கிடந்து, தனி இடத்தில் பெண்கள் மாத்திரமாக நிலா மண்டபத்தில், அதாவது, நிலா முற்றத்தில், ஆலயம் அமைத்து வழிபாடுசெய்து விரத சமாப்தி செய்கின்றார்கள்.

இவ் விரதங்கள், மற்றைய வகுப்பாரிடம் நடைபெறாது நின்றுவிட்டாலும், தென் தேயத்தில் நகரத்தார் வகுப்பில் இன்றும் ஆண்கள் "கார்த்திகை கூப்பிடி" என்னும் விரதத்தையும், பெண்கள், திரு ஆதிரையான் கும்பிடுதல், "நிலா மண்டபம்-நிலா முற்றம், நிலா வாண்டை கும்பிடுதல்" என்னும் விரதங்களையும் அநுஷ்டித்து வருகின்றார் என்பதை அறியும் போது, ஆண் பெண் விவாகாதிகளின் பொருட்டு தேவதா வழிபாடு விரத அநுஷ்டானங்கள் தென் னாட்டில் அதிகமாக இருந்தன என்று தெரிகின்றது. இதனைப் பற்றி மறுபதிப்பில் விரிவாக எழுதக் கருதியுள்ளேன்.

கா—ஸ்வாமிகள்

| | | |
|---|---|---|
| 16. | மஹா ராஜத் துறவு - மகப் பிரசாதினி உரை | ரூ 2—0 |
| 17. | வைராக்ய தீபம் - பத வுரை - பொழிப் புரை | 0—8 |
| 18. | பக்தி (வைராக்ய) சதகம் - பத வுரை - பொழிப் புரை. | 1—8 |
| 19. | சிடாசாரம் பால போதினி உரை | 0—8 |
| 20. | திருக் களர் வீர சேகர ஞான தேசிகர் சரிதம் - வசநம் | 1—0 |
| 21 | தாந்திரீக த்வைத சைவ கண்டநம் - வசநம். (சூட்டுக் கோல் கட்டாரி புச்சம்) | 1—0 |
| 22. | வட நாட்டில் ஹரித்துவாரக் கும்ப மேளாவும், தென் நாட்டில் சாதுக்கள் மேளாவும் - வசநம் | 0—2 |
| 23. | அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தில் இருப்பவர்கட்கும் ஓர் அறிக்கை | 0—2 |
| 24 | சாது சங்க திருவல் விழாக் கூட்ட வைபவம் - வசநம் | 0—2 |
| 25. | மடங்களின் உற்பத்தியும், தற் போது உள்ள நிலைமையும் - வசநம் | 0—2 |
| 26. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (கவி 1135) (ஒன்பது நூல் சேர்ந்தது.) | 3—0 |
| 27. | கீதாத் திரயம் (பகவற் கீதை கவி 545. ஈஸ்வர கீதை கவி 338. பிரஹ்ம கீதை கவி 547) ஆக (1430 கவி) மூன்று சேர்ந்தது | 3—0 |
| 28. | விவேக சூடாமணி (கவி 671), அஞ்ஞ வதைப் பரணி (கவி 494) | 1—0 |
| 29. | பஞ்ச தசி (கவி 804) | 0—10 |
| 30. | வாசிட்டம் (கவி 2055) | 2—4 |
| 31. | கைவல்ய நவநீதம் (கவி 288) | 0—9 |
| 32 | ஸ்தோத்திர ரச மஞ்சரி (கவி 160) | 0—4 |
| 33 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி (கவி 162 அகவல் 95 வரி சேர்ந்தது) | 0—8 |